[29th September 1958

*Rural Development Board*

*591 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்ய அரசாங்கத் தலைமை அலுவலகத்தில் 10-3-58-ல் நடைபெற்ற கிராம நல வளர்ச்சி போர்டு கூட்டத்தில் என்னென்ன திட்டங்கள் பற்றி விவாதிக்கப்பட்டன ?

(ஆ) என்னென்ன திட்டங்கள் அமுலுக்குக் கொண்டுவரத் தீர்மானிக்கப்பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The following are the subjects discussed by the Rural Development Board at its meeting held on the 10th March 1958 :—

(1) Action taken on the recommendations of the last meeting of the Rural Development Board held on the 24th July 1957 ;

(2) Community Development Programme—Review on outstanding achievements and shortfalls of each block for quarter ended the 30th September 1957 ;

(3) Second Five-Year Plan—Review of progress ;

(4) Reports on the Community Development Programme by (i) Mr. M. L. Wilson and (ii) Dr. Carl C. Tayler ;

(5) Primary Health Centres in the Community Development Blocks—Posting of medical officers ; and

(6) Fishery Development in Community Development and National Extension Service areas.

(*b*) No new schemes were placed before the Board for consideration. Hence, the question does not arise.

SRI P. G. MANICKAM : கிராம வளர்ச்சிக்கான திட்டங்களில் முக்கியமானது அங்குள்ள குளங்கள், ஏரிகளை ரிபேர் செய்வதுதான். இது சம்பந்தமாக இந்த போர்டு கூட்டத்தில் என்னென்ன தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. குளங்கள், ஏரிகள் வெட்டுவதற்கான திட்டம் ஒன்று வகுப்பது பற்றி அரசாங்கம் ஏதாவது கவனிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 'மைனர் இர்ரிகேஷன் புரோகிராம்' தனியாக எடுத்துக்கொள்ளப்பட்டு, பரிசீலனை செய்யப்பட்டு கூடிய வரையில் எவ்வளவு அதிகமாக திட்டங்களை எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு எடுத்துக்கொள்ளுவதற்கு முயற்சி செய்யப்படுகிறது. அது இந்தக் கூட்டத்தில் விவாதிக்கப்படவில்லை.

SRI S. LAZAR : பிரைமரி ஹெல்த் செண்டர்களுக்கு வைத்தியர்கள் நியமனம் சம்பந்தமாக இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டதாகக் கூறினார்கள். அதுபற்றி என்ன முடிவு எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது பல பிரைமரி ஹெல்த் செண்டர்களில் டாக்டர்கள் இல்லை. போதிய வசதிகள் இல்லாத காரணத்தினாலே அங்கே டாக்டர்கள் போவதற்கும் தயங்குகிறார்கள். அவர்கள் தங்குவதற்கு வீடுகள் கட்டவேண்டுமென்று இப்பொழுது சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

SRI A. GOVINDASAMY : ஒவ்வொரு மாவட்டத்திலும் ரோடு போடுவது, பள்ளிக்கூடங்கள் கட்டுவதற்காக ஸ்தல அபிவிருத்தித் திட்டம், சமுதாய நலத் திட்டங்களின் கீழ் பொது ஜனங்கள் நன்கொடை அளித்தும்,

29th September 1958]

ஜில்லா போர்டு நிதி போதுமானதாக இல்லாத காரணத்தினாலே இந்த வேலைகள் தயக்கப்படுகின்றன. அதை சரிக்கட்டுவது பற்றி இந்த போர்டில் ஏதாவது ஆலோசிக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப் படவில்லை.

*Charkas*

*592 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோவையில் டெக்ஸ்டூல் கம்பெனியார் செய்த 16 (ஸ்பிண்டில்) கதிர் உள்ள ராட்டைகள் இதுவரை அரசாங்கம் எத்தனை வாங்கியிருக்கிறது ?

(ஆ) இந்த ராட்டை ஒவ்வொன்றின் கிரயம் என்ன ?

(இ) இவற்றை எந்த கிராமத்தில் வைத்து பரிசீலனை செய்யப்படுகிறது ?

(ஈ) பரிசீலனை மூலம் இதுவரை கண்ட முடிவு என்ன ?

(உ) இந்த ராட்டை மூலம் ஒரு மணிக்கு எந்த நம்பர் உள்ள நூல் எத்தனை சிட்டம் நூற்க முடிகிறது ?

(ஊ) நூலின் பலம் பரிசீலனையில் எப்படி இருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Twenty-five spinning units have been purchased from Messrs. Textools, Limited, Coimbatore.

(*b*) The cost of each unit is Rs. 1,000 only exclusive of the cost of motor and accessories.

(*c*) The units are being worked at Pollachi and surrounding villages of Nallapattipalayam, Nagamam, Muthur and Annamalai.

(*d*) It has been found that the spinning units when worked by two persons (one adult and a boy or woman) for 8 hours can produce 5 lb. of 20s yarn (100 hanks), the quality of which compares very favourably with mill yarn. The yarn has been used on four looms installed at Pollachi and cloth so woven has proved to be popular.

(*e*) Between 10 and 13 hanks of 20s yarn could be spun in one hour.

(*f*) The yarn spun by the trainees is fairly uniform in count and tensile strength and compares very favourably with the mill yarn.

SRI A. VEDARATHNAM : இந்த முடிவுகளிலிருந்து இந்த ராட்டைகளை மேலும் விஸ்தரிப்பதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? அப்படியானால் எந்த அடிப்படையில் ? எவ்வளவு ? எந்த இடத்தில் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நூல் நன்றாக இருக்கிறது. நூலினால் நெய்யப்பட்ட துணியும் நன்றாக இருக்கிறது. ஆனால் கைத்தறிக்காரர்கள் இதை எவ்வளவு தூரம் கையாளுகிறார்கள் என்பது இப்பொழுது பரிசீலிக்கப்படுகிறது. கைத்தறிகாரர்கள் இருக்கும் இன்னும் இரண்டு சென்டர்களில் இதைப் பரிசீலித்து கவனிப்பது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.